

கணபதி துணை.

# காத்தான்

என்கிற இயற்பெயருடைய

# வருணகுலாதித்தன் மடல்.

(விநாயகர் காப்பு.)

மாதுபுனைகாத்தான்வருணகுலாதித்தன்மேற்செய் ... ... *
றோதுதமிழ்ப்பாவுலாமடற்கு-ஆதிகர் ... ... *
சந்தமுலைசசந்த்ராநுதற்சங்கரிபுத்ரன்கருணைக் ... ... ... *
கந்தமதத்தந்திமுகன்காப்பு ... ... ... ... *

(முருகர் காப்பு.)

எங்குமுள்ளவர்ணனைகளெல்லாமெய்த்தாய்ந்து ... ... *
மங்கையர்கள்சிங்காரம்வாழ்த்தியே-மங்கள ... .. ... *
வருணகுலாதித்தன்மடல்பாடுதற்குக் .. ... ... *
கருணைபொழியாறுமுகன்காப்பு... ... ... ... *

(பாட்டுடைத்தலைவன்சிறப்பு.)

கருணைமுகிலானகொடைக்காத்தான்றென்குருகை ... .. *
வருணகுலாதித்தன்மகிழ்ந்தால்-அருணமலர்ச ... ... *
செங்கையெங்குஞ்சங்குதங்குந் திங்கள்பொங்குங்கங்குண்மங்கும்
கொங்கையெங்குங்குங்குமந்தங்கும் ... ... ... ... *

(மாதின்சிறப்பு)

நீர்கொண்டமேகநிறங்கொண்டமேனியாய் ... *
பார்கொண்டபாதப்பரந்தாமன்-சீர்கொண்ட ... (க)

உம்பருக்குமாலெழுப்பியோங்குநெடுமேத்தாகச் .. ... *
செம்பொற்கிரியைத்திரிந்ததுவும்-அம்பரத்து ... (உ)

வீசுமதிநாளுகமேனிமெலிவித்ததும் ... ... *
வாசுகியைநாளுவருத்தியதும்-ஓசையலை ... ... (௩)

தன்னைக்கடைந்ததுவுந்தன்னமுதத்தோடிருந்த ... *
பின்னைத்தழுவியதுமென்னுமல்-பன்னித் ... ... (௪)

திரம்பேசுங்கோவலர்பாற்சென்றுபதினாறா ... ... *
யிரம்பேர்மணம்புணர்ந்தாளென்றும்-பெருங்கனக ... (௫)

வல்லார்க்குங்கொங்கைமடவார்முதலாய ... ... *
எல்லார்க்குமாலாயிருமென்றும்-சல்லாப ... ... (௬)

சிந்தைதனைமற்றோர்பாற்செல்லாவகைசெறிக்க ... ... *
வந்துலகிலுற்பவித்தமாமாது-அந்தரத்தில் ... ... (௭)

ஓதினியமின்போலொளியாமலெப்பொழுதும் ... ... *
மேதினியிற்சஞ்சரிக்குமின்கொழுந்து-பூதலத்தில் ... ...(௮)

பைந்தொடியார்கோலம்பகல்விளக்குப்போலாக ... ... *
வந்தொருநந்தாமணிவிளக்குச்-சந்தப் ... ... (௯)

படிவமெடுத்தபசுந்தோகையோகைப் ... ... *
பிடிநடையன்னத்தின்பேடை-அடிதுவக்கித் ... ...(௰)

தங்குங்கொழுந்தென்றுதள்ளாமலோரிடம்போல் ... ... *
எங்குந்தித்திக்குமிளங்கரும்பு-பொங்குமெயில் ... (௰௧)

கண்டுமுகங்கருகாக்கண்டென்னுத்தாதுதிரா ... ... *
வண்டுழுவையாமதுமாலை-அண்டர்பால் ... ... (௰௨)

சோராக்கலைகுறையாச்சுற்றுமுயற்களங்கம் ... ... *
சோராமறையாச்செழுந்திங்கள் ஆராயும் ... ... (௰௩)

மைத்தவழுந்தென்பான்மலயமலையிற்பிறவாச் ... *
சித்தசனேறாச்சிறுதென்றல் வைத்த ... ... (௰௪)

உலைபுகாக்காயாவுருகாநிறக்குந் ... ... *
துலைபுகாமாற்றுரையாச்சொர்ணம்-அலைகடல்சூழ் ... (௰௫)

வெம்பூவின்முப்பூவினைநிலத்தின்வீறடங்க ... ... *
ஐம்பூவினையுமயிர்த்தநிலம்-செம்பிரத் ... ... (௰௬)

# வருணகுலாதித்தன்மடல்.

தார்க்குமெவர்க்குமருந்தாயிருந்தாலும் ... ... *
பார்க்கமயக்கும்பசுந்தேறல்-போர்க்குரிய ... (௰௭)

காமனுக்குவச்சிராங்கிகாமனுக்குநிக்ஷேபம் ... ... *
காமனுக்குமோகக்கருகூலம் காமனுக்கு ... (௰௮)

ஏழுதண்டலோகமுழுதுஞ்செங்கோனடத்தும் ... ... *
கோதண்டதீக்ஷாகுருபீடம் மாதவரும் .. ... (௰௯)

நற்றவருநிதியநாடோறுநன்னென்று ... ... *
கற்றகவியின்பக்கலைக்கியானம் வெற்றிமதன் ... (௨௰)

மீதிட்டகாமநூல்வித்தைக்கடங்காமல் ... ... *
வாதிட்டபஞ்சவர்ணக்கிள்ளை ஆதித்தன் ... ... (௨௧)

பொங்குகதிர்காணுசப்பூங்குமுதங்கங்குலையும் ... ... *
திங்களையுங்காணுச்செழுங்கமலம் எங்குநில ... (௨௨)

வாகநகைக்குமரம்பையரின்மேனகைக்கும் ... ... *
யோகநகைக்குங்குலதெய்வம் பாகுமொழிப் ... (௨௩)

பண்ணூரடையும்பழகுமொருசித்திரம்போல் ... *
நண்ணூமதனராசகுளிகை வண்ண ... ... (௨௪)

நெடியதருவிற்படராநீள்வல்லிதாவிக் ... ... *
கொடிபடராக்கற்பகப்பூங்கொம்பு வடிவுமிகு ... (௨௫)

பெண்ணுருவமாகப்பிரவாளங்கிளைத்தமுதல் ... *
மண்ணுலகங்காக்கவருமமிர்தம் எண்ணம்... ... (௨௬)

சிறப்பிக்கமாதவத்தோர்செய்தவங்களெல்லாம் ...
துறப்பிக்கவந்தபெருஞ்சூழ்ச்சி நிறைத்துப் ... (௨௭)

பெருகியுவட்டெடுத்தபேரின்பவெள்ளம் ... ... *
பருகிற்றெவிட்டாப்பசுந்தேன் ஒருவருக்கும் ... (௨௮)

பூணக்கிடையாதபொன்னாரந்தாரத்தே ... ... *
காணப்பரிமளிக்குங்கஸ்தூரி நீணிலத்தில் ... ... (௨௯)

கொல்லாக்கொடுங்கூற்றங்கூவாமற்கொஞ்சுகுயில் ... *
எல்லாக்கலைக்குமினியமான்-உல்லாசத் ... .. (௩௰)

(அடி)

தேமேவனிச்சச்செழும்போதெனுமினிய ... *
பூமேனடக்கப்பொருமலோ மாமோகத் ... (௧௧)

தந்தமதநூல்கொண்டமிர்தநிலையாராயும் ... ... *
மைந்தரதிமதுரவாய்ப்பட்டோ முந்துகணைச் ... (௧௨)

செங்கைச்சிலைவேள்திருவடியின்மேல்வைத்தோ ... *
மங்கையர்தங்கையால்வருடியோ பங்கமுற ... (௧௩)

வாட்டியவாளேனைவசீகரிக்கச்செம்பஞ்சு ... *
தீட்டியோகோலஞ்சிவந்ததோ நாட்டம் ... (௧௪)

திகழுவகஞ்சிவந்துசெம்பவளக்கொம்பும் ... *
பகருமெழிலிந்திராணியத்தும் புகழிளைஞர் ... (௧௫)

மெத்துமதிசோர்வதற்குவிலாமதிபோதாதென்று ... *
சித்தசன்றனுராய்ந்துசெய்தமதி பத்தும் ... (௧௬)

பெரிதுவிஜயம்பெறுமதனராஜன் ... ... *
சரித்திரைபுஸ்தகமுந்தாங்கிட்-பரவியே ... ... (௧௭)

ஆதிப்பிரமனைத்தைத்திருத்திநடை ... ... *
சாதிப்பிக்குங்கமலத்தையிருள் மேதினியில் ... (௧௮)

(பரடு)

நாளோமடல்விரியுநாளிகேரத்தினைப் ... ... *
பாளைவிரியாப்பசுங்குரும்பை நாளும் ... ... (௧௯)

அவங்கள்புரியாதருந்துறவோர்செய்யும் ... ... *
தவங்கனிவுக்குந்தராக நவங்கொள் ... ... (௨௰)

இரண்டுதிகராகியெல்லோர்க்குமின்பம் ... ... *
திரண்டவெனவழங்குகின்ற மருண்டமதன் ... (௨௧)

வேதசாரங்குமுறுமின்னூபுரத்துடனே ... ... *
பாதசாலஞ்சூழ்பரட்டினுள் ஆதரவின் ... ... (௨௨)

(கணைக்கால்.)

ஆட்சிமதராஜவிருதத்தணையுமூதாமல் ... ... *
காட்சியிலேபோதிக்குங்காளம்போல் மாட்சியினை ... (௨௩)

மீதார்விழிக்கயலின்மேற்பாயக்குதொட்டி ... *
வாதாகிநிற்கும்வராலினைபோல் ஊதுகுயிற் ... (௨௪)

காளமதன்முதுகுகாட்டாமன்மாட்சிபெறத் ... ... *
தோளதனிற்கட்டுகின்றதூணிபோல்-மேவின் ... (௪௫)

பெருத்தகணைக்காலைத்தும்பின்னிடவேமைந்தர் ... *
கருத்தைவருத்துகணைக்காலாள்-ஒருத்தி ... (௪௬)

(முழந்தாள்.)

அலையுமிலங்காபுரியிலன்றுசென்றதூதர் ... *
தலையுமருட்டுமுழந்தாளாள்-அமுதுபயில் ... (௪௭)

(துடை.)

அங்கவனுராகவதிமோகசாகரத்தைச் ... ... *
செங்கையுறநீந்துகைக்காந்தெப்பமோ-இங்கிதமாய் (௪௮)

மட்டுபடாவிளைஞர்வாஞ்சைமதயானை ... ... *
கட்டுப்படுமிரண்டுகம்பமோ-தொட்டுமயல் ... (௪௯)

நாட்டுகலவிக்கினியநாடகசாலைக்கழகு ... ... *
சூட்டிமணிமுகப்பின்றூண்களோ-கோட்டிபத்தின் (௫௰)

சுத்தத்துதிக்கையோசொல்லுவமையென்றலகோர் ... *
சித்தத்துதிக்கைசிறப்பித்து-மெய்த்திமிர ... (௫௧)

வாரணவேளோலக்கமால்வசந்தமண்டபஞ்சேர் ... *
தோரணவாழைத்துடையினாள்-தாரணியில் ... (௫௨)

(அல்குல்)

ஆலிக்குவில்வேளமளியிலேயிவ்வுலகில் ... ... *
பாலிக்குமிந்த்ரபதமென்னச்-சீலிக்கும் ... (௫௩

புத்திக்குமாலுதவும்போர்மாரன்பொக்கமென ... *
வந்திக்கும்பொன்றூலவட்டமெனச்-சிந்தித்துச் ... (௫௪)

சூழுமணிதாங்கித்துலங்குகுறங்காமிரண்டு ... ... *
வாழையிடைச்செந்தேனைவைத்ததென-வேழமதன் (௫௫)

காமித்ததென்றல்கரக்கிளூறக்காரிகையார் ... ... *
சேமித்தலங்கரித்ததென்னப்-பூமிக்குள் ... (௫௬)

வண்மைமதனூலொழிபமற்றுளநூல்பொய்யெனவே ... *
உண்மைவிளக்குமுருவமாய்த்-திண்மைபுனை ... (௫௭)

அரும்பிவிரும்பியசைந்துதசைந்து ... ...
நிரம்பிநெருங்கிநெகிழ்ந்து-பரந்து ... ... (௧௧

சுணங்குநிறைந்துசுகந்தகதம்ப ... ... ... *
மணங்குடிகொண்டுவயங்கி-இணங்கி ... ... (௱

அருந்தவர்சிந்தையடங்கிமடங்கி ... ... ... *
வருந்தநெருங்கிவளர்ந்து-திருந்தியொரு ... (௱௧)

நீழுங்கொள்ளாதசெழுந்தாமரைமுகையின்... ... *
மோதுஞ்சிறுதிவலைமொய்த்தனபோல்-ஓதமரர் ... (௱௨)

வாழுக்கடல்கடைந்தமாயோன்மணிமகுடம் ... *
சூழத்தெறித்தசுதைத்துளிபோல்-எழுலகும் ... ... (௱௩)

மெச்சுகலைமதியின்வெண்ணிலாவீசுமுத்தின் ... *
கச்சுப்புனைந்தகனதனத்தாள்-இச்சையினுல் ... (௱௪)

(கைவிரல்)

ஏத்துகின்றகாமுகர்மேலின்பவெண்முத்திரையைச் ... *
சாத்துகின்றமுத்திரைக்கோமுனென்னச்-சூத்திரங்கள் (௱௫)

டாயிலொருவரறியாவயிர்தநிலைச் ... ... ... *
கோயிறக்குந்திறவுகோலென்னத்-தூயகலை ... (௱௬)

வாசிக்கும்பஞ்சவனக்கிள்ளையில்சிவந்த ... ...*
நாசிக்குநேராய்நகந்துலங்கத்-தேசுற்ற ... ... (௱௭)

பத்ரகரவீரபத்திரமோகோமளஞ்சேர் ... ... *
சித்ரப்பருவச்சினைக்கெளிறே-மெத்தென்று ... (௱௮)

துய்யபவளத்துவடருகொம்போவென்ன ... ... *
வெய்யமயல்பூட்டும்விரலினுள்-செய்யசெழுந் ... (௱௯)

(உள்ளங்கை)

தாமரையின்போதைச்சலப்படுத்திக்காந்தளெனும் ... *
மாமலரைத்தூரவனத்தகற்றிக்-காமுகர்மேல் ... (௱௰)

வெங்கடுங்கோபத்துடனேவீசிப்புடைத்தாலும் ... *
செங்கழுநீர்ப்பந்தொத்துச்சீதளமாய்-இங்கிதத்து (௱௰௧)

மோகம்பூரிக்கமுடிதுவக்கித்தாளவும் ... ... *
ஆகம்பூரிக்குமங்கையர்கள்-ஓகையினை ... .. (௱௰௨)

(முன்னங்கை)

விண்டிருக்கும்யாழ்களெல்லாம்வெட்கத்திருவுருவம் . ✻
கொண்டிருக்கும்யாழினியகோதொடாத்து-வண்டணிந்து (௧௰௩)

சுற்றுநவரத்நந்துலங்குகடகங்களினால் ... ... ✻
மொய்த்தழகுமாருந்தமுன்கையாள்-சித்ரமுலை ... (௧௰௪)

(தோள்)

பூரணகும்பங்களின்மேற்போட்டபெருமாலையென்ன ...✻
ஆரணிவில்வேள்பஞ்சணையென்னச்-சீரணிந்து ... (௧௰௫)

கொங்கைமலைமேலங்குரித்தெழுந்து கீழ்வளைந்த ... ✻
துங்கமணிவேய்போலுந்தோளினாள்-திங்கட் .. (௧௰௬)

(கழுத்து)

சுழுகமதராஜன்சுருதியிருநாலாம் ... ... ✻
குழுகுமெனும்புள்ளோசைகொஞ்சத்-தமரிக்கும் (௧௰௭)

வன்னிக்கும்பாலைமடலவிழுநாள்செல்லும் ... ...✻
கன்னிக்கமுகனையகந்தரத்தாள்-முன்னிரவி ... (௧௰௮)

(முகம்)

வந்தால்விகசிதமாய்வண்டின்பதந்துவையாச் ... ✻
செந்தாமரைபோற்றிருமுகத்தாள்-நந்தாத ... (௧௰௯)

(உதடு)

மாபவளமோவிலவோமாதளையோவேல்விழியின் ... ✻
கோபவளமோயிந்த்ரகோபமோ-சேவைதரும் ... (௧௨௰)

தூதளையோகிஞ்சுகமோதொண்டையோவண்டினங்கள் ✻
தாதளையுஞ்செங்குமுதத்தண்மலரோ-ஈதென் ... (௧௨௧)

றெவருமுபமானமெடுத்துரைக்கநன்மா ... ... ✻
தவருமயங்கித்தயங்கக்-குவிபொன் ... ... (௱௨௨)

பொழிந்தருளுந்தென்றுரைசைப்பூபதியைப்போற்றும் ... ✻
செழுந்தமிழேபோற்செம்மைசேர்ந்து-தொழுந்திருமால் ()

இன்னமொருகாலிருகைவருந்தாமல் ... ... ...✻
வன்னமதியமழுங்காமல்-இன்னமிர்தம் ... (௱௨௪)

ஆனவுததியலையாமல்வானவரும் ... ... ... ✻
தானவரும்வெம்போர்சருவாமல்-நானிலமேல் ... (௱௨௫)

வாசுகியுமந்தரமுமாயாமன்மாறுமல் ... ...
ஆசையமுதூறுமதரத்தாள்-வீசுகதிர் ... (௱௨௬

(நகை)

முத்தாகித்தோகைமுருந்தாகிமுல்லைமுகைக் ... *
கொத்தாகித்தந்தக்குருத்தரும்பி-விஸ்தாரம் ... (௱௨௭)

வாய்ந்தபத்மராகமணியைத்தரம்பிறித்துத் ... *
தேய்த்தொப்பமிட்டுவைத்தசேர்வையெனக்-கோத்துப் (௱௨௮)

பொருதிருபவெள்ளிலையிற்பூங்காவிபோன்ன ... ... *
இருதிரையும்பூங்காவியேறி-உருகிமனம் ... ... (௱௨௯)

பூணநகைக்கும்புகழ்க்கொல்லியம்பாவை ... ... *
நாணநகைக்குநகையினாள்-காணவெதிர் ... ... (௱௩௰)

(சொல்)

தீட்டிவைத்தசித்திரத்தைச்சிங்காரமோகனைக்கூத் ... *
தாட்டுவிக்குஞ்செஞ்சொலமிர்தத்தாள்-தேட்டிலயன் (௱௩௧)

(கபோலம்)

மண்ணுடர்விண்ணுடர்வந்தழகுபார்க்கவைத்த ... *
கண்ணாடிபோலுங்கபோலத்தாள்-வண்ணவெழில் (௱௩௨)

(மூக்கு)

கொள்ளுங்குமிழுங்குமிழ்போனிறம்படைத்தால் ... *
எள்ளுஞ்சரியாமிதற்கென்னைத்-தள்ளிச் ... (௱௩௩)

சரமஞ்சரிவிடுத்தசண்ணம்பழித்த ... .. ... *
அருமந்தசீவகனுமஞ்சப்-பெருமணத்திற் ... (௱௩௪)

காமாதுவல்லடிங்கணத்துக்களந்தறியா ... ... *
ஆமோதவல்லபமுண்டாக்கிவைத்துப்-பூமேவு ... (௱௩௫)

விற்காமன்றேரோடும்வீதியெனச்சந்ததமும் ... ...*
நற்கால்வழங்குகின்றநாசியாள்-பொற்கோதை ...(௱௩௬)

(செவிகள்)

தேன்போதணியுஞ்செழுங்காவிக்கண்களுளும் ... *
மான்போய்வரவிட்டவாயில்போல்-தாம்போதத் (௱௩௭)

தாவப்பொன்றோலைதரித்தால்விழிக்கூற்றம் ... ... *
வாவப்பிடிக்கும்வலயம்போல்-பூவுலகென் ... (௱௩௮)

சத்தமுழுமாணிக்கத்தோடணிந்தானீலவிழி ... *
யத்தியிருபானுதிக்குமாதவன்போல்-பத்திதரும் ... (௱௩௯)

பைந்தரளத்தோடணிந்தாற்பார்வைச்சகோரங்கள் *
வந்தமுதமுண்ணுமதியம்போல்-புத்தவே ... (௱௪௰)

சாலவழகுதனும்பிவழிந்தொழுகும் ... ... *
கோலமகரக்குழைச்செவியாள்-ஆலவடி ... (௱௪௧)

(கண்கள்)

வேல்போனிறம்படைத்துவாள்போலிரண்டு ... *
சேல்போற்கயல்போற்றிசைபரந்து-மால்போலச் (௱௪௨)

சஞ்சரிகம்போலத்தயங்கிக்கடல்போல ... *
நஞ்சமுறுநயந்தருளிக்-கஞ்சமெனச் ... (௱௪௩)

செங்குவளையென்னச்சிறந்தகருவிளையின் ... .. *
பொங்குமலரெனவேபொற்பெய்திக்-கங்குலிபக் .. (௱௪௪)

கோலாகலவேள்கொலைப்பஞ்சபாணமெனக் ... *
கேலாவிரகாக்கினிபொழிந்-தேலான ... ... (௱௪௫)

தோரவடிவரிர்போற்செவ்விக்குறிபொங்கி ... .. *
மாமாரனென்னாதத்தோடிப்-பூமாதின் ... ... (௱௪௬)

ஆகியரிபோலரன்போலயன்போலச் ... ... . *
சோதிகறுத்துவெளுத்துச்சிவந்து-பாதகமும் ... (௱௪௭)

மாயமும்பொய்மையும்வஞ்சகமுந்தஞ்சமிகு ... *
நேயமுஞ்சூதுநினைவுருக்கு-பாபமும் ... ... (௱௪௮)

அத்திரமும்சீறுமதிக்கிரமுமுரங்களவும் ... ... *
குத்திரமும்போதக்குடிகொண்டு-நித்தமிகல் ... (௱௪௯)

வாதையடர்த்துவரியாந்துமைமெழுதிக் ... ... *
காதையடைந்துகடைசிவந்தே-ஓதுகலை ... (௱௫௰)

கற்றவரையெல்லாங்கருத்தழிக்கக்காமரசம் ... ...*
உற்றவலங்காரமுட்கொண்டு சுற்றும் ... (௱௫௧)

புவிக்குணிகரற்றபுலவோர்தஞ்செஞ்சொற் ... ...*
கவிக்குநிகராகுமிருகண்ணூர்-குவித்தமலர் ... (௱௫௨)

சூழளகக் கொண்டலுக் குஞ்சொறு நுதற்பிறைக்கும் ... .. *
தாழ்வொளிரு மிந்த்ர சாபமோ-ஆழிவரு ... ... (௱௫௩)

காளமனைய கலைச்சங்கிராம விழி ... ... ... *
வாளி லுறைகழற்றி வைத்ததோ-வாள ... ... (௱௫௪)

நெருங்குகடலுட் புலப்ப நீலநிறப் பார்வைக் ... ... *
கருங்கடலுக் கிட்டகரையோ-பெருங்கடைக் ... (௱௫௫)

காமனையிலுங் கயலும் பொருநயன ... ... *
தாமரையின் பக்கத்தரங்கமோ-மாமதனைச் ... ... [௱௫௬]

சித்திரமோ காதிசயஞ் செய்விக்குமாறணிப்ப ... ... *
பத்திரமோ வென்னும்படி விளங்கிப்-புத்திதனை ... ... [௱௫௭]

வாட்டுசிலை வீரமதவேள் மலரம்பு .. ... ... *
பூட்டுசிலை போலும் புருவத்தாள்-தோட்டிதழிக் ... [௱௫௮]

[நெற்றி]

கொந்தார் சடையோன் குலவுநுதற்கண் போலச் ... ... *
சிந்தூரந் தீட்டுந் திருநுதலாள்-அந்தரத்தில் ... [௱௫௯]

[கூந்தல்]

ஓட்டமிடுந் திண்டே ருதயமார்த்தாண்டன்மேல் ... ... *
கூட்டமிடுங் கங்குற் குழாங்கொலோ-நாட்டமுறத் ... [௱௬௰]

தேசுபுனை பங்கயமேற் சேர்மதுகரத்திரளோ ... ... *
வீசுமுகமதி தோய் மேகமோ-ஆசைமதன் - - (௱௬௧)

காவணமோ கொன்றைக் கருங்கனியோ காயாவின் - - *
பூவணமோ மஞ்ஞைருபயில் பூங்காவோ-தாவுதமிழ் - -[௱௬௨]

கல்லார்மனமோ கலவிவிலைவாங்க - - - *
வல்லார் பொருமகளிர் வன்னெஞ்சோ-எல்லாரும் - [௱௬௩]

ஏதெல்றதிசயிக்க விந்த்ர நீலத்தினறாந் - - - *
தாதொன்றி வாசச்சவாதணிந்து-போதொன்றி - [௱௬௪]

நெய்த்துக்கடை குழன்று நீண்டுசுருண்டடர்ந்து - - *
மைத்துத் தகரமணம் பொதிந்து-மெய்த்துமணம் - [௱௬௫]

சோதிக்கும்வண்டுஞ்சுரும்புமாடிப்பாடிச் - - *
சாதிக்குநாடகசாலையோ - ஓதத் - - - [௧௬௬]

துளிநீரலைபோற்றுறவோரலையப் - - - *
பனிநீரால்வாசம்பரவித் - துளிமேய - - - [௧௬௭]

வெறும்புகையுநெட்டுயிர்ப்புமேயினோர்கொள்ள - - *
நறும்புகையுஞ்சார்ந்துநயந்து - நிறம்புரிய - - [௱௬௮]

பைந்தளவுமல்லிகையும்பன்னிரும்பாரித்தால் - - *
சுந்தரத்திற்றூராகணம்போன்றும் - சந்தமடற் - [௱௬௯].

றண்காளுஞ்செங்கமலஞ்சாத்திறன்மாயவனோர் - - *
கண்காண்முகங்கனிவாய்போன்றும் - திண்காதல் - (௱௭௰)

கைவண்குருவேர்கலந்தால்பரிபறக்கும் ... .. *
சைவலத்தின்கொத்துத்தலைபோன்றும் - இவ்வகையே (௧௭௧)

வேரிச்செழுமலரும்வில்வேள்கணைமலரும் - - *
வாரிச்சொருகுமலர்க்குழலாள் - தாரணியில் - - (௧௭௨)

(வடிவு.)

சாதுரியவேதாவுந்தார்குழலாளைப்படைக்க - - *
மாதுரியம்பார்க்கும்வடிவினாள் - ஆதரிக்கும் - (௧௭௩)

(தன்மை)

மையன்மதவேள்வளநகரிசோதனைக்கோர் - - *
தையலுருவாகிவந்ததன்மையாள் - தூய்ய - [௧௭௪]

(மலை)

தொடருமழைமேகத்தோய்தலாற்குழப் - - ச
படவிதனைச்சுற்றும்பொருளால் - படரும் - [௧௭௫]

தளவுநகைப்பாவைதரலாம்மதிக்க - - - *
அளவுபடாதவதனால் கிளருமெழில் - - [௧௭௬]

அம்புலிதோற்றத்தாலைதருநீலப்பரப்பால் - - *
விம்பமணிக்குன்றுபலமேவலால் - உம்பரின்மேல் [௧௭௭]

தேங்குவசீகரத்தாற்றின்கோட்டுநாகமே - - - *
தாங்குதலான்மாலைத்தரிக்கையால் - ஓங்கி - - [௧௭௮]

வளங்குலவு நேமிமகராலயம்போல் - - - *
விளங்குருடனிவன் விதித்த-வளங்கொள் - - [க௦௯]

தமிழின்சுவையெனவே தவன்குறிஞ்சிச் செந்தேன் - *
உமிழப்ப வளமலையுள் ளோன்-கமழும் - - [க௱ய]

(நதி)

செழுங்கடுக்கைத்தாரானன் செஞ்சடைபோல் மின்னி - *
முழுங்கித்திசையனைத்து மூடி-ஒழுங்கிக் ... ... [ச௱க]

கடவிர் பருகிக்ககனமுகடேறித் - - - - *
இடநீடுகுன்றச்சிகரத்-தடவி - - - [க௱உ]

மேகத்திரள்கால்விழுந்துபொழியமண்ணும் - *
மாகமுமொன்றாகவளர்வெள்ளப் போகமலர் - [க௱௩]

மானைப்புணருட்வருண குலாதித்தன் மகிழ்ந். - - *
சேனைப்பெருக்கமெனத் திகழ்ந்து-கானில் - (க௱௪)

விசைகொண்டு கொலெடுத்து வீசி நடந்தோடித் - - *
திசைகொண்டு கொம்பிரஞ்செய்து பிசைபுந்தித் - [க௱௫]

தன்குறிஞ்சிவந்தடைந்து சட்பகப் பிடுங்கி வண்டு - *
பன்குறிஞ்சி நந்துகொந்துபந்தறைந்து-தென்குறிஞ்சி [க௱௬]

சந்தனங்களைந்து மந்திதந்திசிங்கமென்கிளைங்கள் - *
உந்தியொன்றொடொன்றெதிர்ந்து டைந்தமிழ்ந்த-வந்திறைந்து [

விண்டுமண்டுவிண்டடர்ந்து விண்டொடர்ந்தகுன்றடைந்து *
கொண்டுநின்றகுங்குமங்கொணர்ந்தெழுந்து-மிண்டுகின்ற [ ]

தந்ததொந்தமென்றுசந்ததஞ்சழங்குகொண்டமைந்த் - *
அந்தவண்டலெங்குமொண்டடர்ந்துசென்று-முந்தி [க௱கூ]

விளைந்தகருந்திணைசெந்திணைவிஞ்சி - - - - *
வளைந்தபுனங்களைமண்டி-அளைந்து - - [கஙய]

வருந்தமனைக்குறமங்கையரொன்றி. - - - - *
இருந்தவிதங்களெறிந்து நிரப்பிய - - [கஙக]

குங்கிலியமூர்திமிசுங் கொண்டோங்கிக்கேகயமும் -
பைங்கிளியுமோடப்பாந்தோடித்-துங்கமுறத் - [கஙஉ

தாங்குமயில்படைத்ததாடாளனைக்கரத்தில் - *
ஓங்குமயில்படைத்தவுத்தமனைப்-பூங்கடப்ப - [௱௯௩]

மாலையனைவிண்டார்மனமாடபீடத்தின் . . ... *
மேலயனைக்காவல்விளைத்தானைக்-கோலபதி - [௱௯௪]

பாறுமுகத்தானையசுரகுலமழியத் ... ... *
தூறுமுகத்தானைத்தொலைத்தானை-வீறுமலர் - [௱௯௫]

வேரிப்பதாம்புயனைமென்குறத்திகொங்கைபடப் - *
பூரிப்பதாம்புயனைப்புண்ணியனைச் சீருற்ற - [௱௯௬]

கந்தனைச்சேயைக்கடவுளைச்செவ்வேளையான் ... *
வந்தனைக்கண்டுமனமகிழ்ந்து முந்தியெதிர் - [௱௯௭]

பாலவனமேவியதிபாதகவில்வேடாணி - - *
வேலைவடிவாளையிலமேனுதறி-ஓலமிடு - [௱௯௮]

கூபமுறைநிறைந்துகூடிவிளையாடியநி - - *
தாபவனமேவியழல்சாடி நிறை-மாபுரவின் - [௱௯௯]

கூடுகளைகாரகிலைக்கோலமருடானகள்ளிக் - *
காடுகளைச்சாய்த்திருப்பைக்கானலுகி-நீடுவிறற் [௨௱]

பாரளைப்போர்ப்பகற்குறையாடுவார் - - *
போராடலெல்லாம்புறங்கண்டு-சீராகி - [௨௱௧]

அந்தரிசிங்கலையம்பிகைசங்கரி - - - *
சுந்தரிவிந்தைசுமங்கலை-மந்தர - - - - [௨௱௨]

பாரபரையோதரிபூதரி - - - *
காரணிவாரிணிகாமினி தீரி - - [௨௱௩]

அமலைநிமலையரிவைதெரிவை - - *
கமலசரணிகவுரி-குமரி - - [௨௱௪]

வராகிபாலிமனோன்மணிசூலி - - *
புராணிசடாதரிபூவை-தராதலத்தோர் [௨௱௫]

பன்னியடிவணங்கும்பாலைக்கிழத்தியெனுங் *
கன்னிதழுவக்களிகூர்ந்து நன்னிலமை [௨௱௬]

முல்லைபுகுந்துமுருகுபெருகுநெடுங் ... ... *
குல்லையணிந்துகுழலேந்தி-எல்லையிற்றன் ... (௨௱௭)

மன்றலளகத்துக்கும்வாணகைக்குமொப்பென்று ... *
கொன்றையுமுல்லையுங்கோத்தெரிந்து வென்றி ... (௨௱௮)

திரள்புருவினாகையர்கோன்செங்கைக்கொடைபோல் ... *
சுரபிதனையஞ்சத்துரந்து-குரவையிலே ... (௨௱௯)

மண்டுபொதுவியர்தமாமேகலைவாரிக் ... ... *
கொண்டுநெடுமால்போற்குருந்தேறித்-தண்டலையில் (௨௱௰)

காயாமலர்நிறக்காரணமென்னென்றுவிழச் ... ... *
சாயாமுறியாத்தமரித்துத் தூயமலர் ... ... (௨௱௰௧)

வெண்படாத்தைக்களைந்துவேறுபடாஞ்சாத்துவர்போல் ... *
தண்படாவெண்படாஞ்சாத்திப்போய் வண்பரனார் (௨௱௰௨)

நேரிழைவந்தாளென்றுநெய்பாறயிரானெ ... ... *
வாரியெதிர்கொள்ளவந்தவெனைப் பாரியெனும். ... (௨௱௰௩)

சீரான்வருணகுலாதித்தன்பானாகையிலே ... ... *
பாமோரிருந்தருந்தும்பந்தியெனப்-பேராயர் (௨௱௰௪)

பாடிதனினெய்ச்சாடிபாற்சாடிமிக்கதயிர்ச் ... ... *
சாடிநிமிடந்தனிற்சாடி ஓடிக் ... ... (௨௱௰௫)

கடுங்கானிடைநடந்துகல்லைப்பெண்ணாக்கி ... *
அடிகாளவெம்பணியிலாடி நெடுங்கோட்டு ... (௨௱௰௬)

மாமருதஞ்சாய்த்துவணங்குவார்நெஞ்சுறைந்து ... *
தாமமணியுஞ்சகடுதைத்து பூமியெனும் ... (௨௱௰௭)

மின்னையளந்துவிளங்கித்தலைநாளிற் ... ... *
றன்னையும்பெற்றவிருதாள்வணங்கி முன்னி ... (௨௱௰௮)

மருதம்புகுந்துவனசம்புனைந்து ... ... ... *
மருதங்களைந்துவளைந்து கருதரிய ... ... (௨௱௰௯)

எம்பிரான்றேவியெழுந்தருளினாளென்றே ... ... *
உம்பர்கோன்வைத்தவுழுப்பையெனப் பைம்பூகத் (௨௨௰)

நாறுமினநீருந்தண்கரும்புமஞ்சளிஞ்சித் ... ...*
தேறுங்கருணைச்செழுங்கிழங்கும் உடதிரதத் ... (௨௨௧)

தேமாநறுங்கனியுந்திண்பலாவின்கனியும் ... ... *
மாமாதளையின்வளர்கனியும் ஆயலகட் ... ... (௨௨௨)

பைங்கனியும்வாழைப்பசுங்கனியும்பேரொழுமிச் ... *
சங்கனியும்பொற்றமரத்தங்கனியும் தங்கமலர்ச் (௨௨௩)

சோலைவாய்வண்டுவைத்தசுத்தப்பசுந்தேனும் ... ...*
ஆலைவாய்க்கன்னல்பொரும் மாலதியும் ... ... (௨௨௪)

பண்ணீருமல்லிகையும்பாளையும்பாதிரியும் ... *
மண்ணுங்குவளைமருமலரும் இன்னவகை ... (௨௨௫)

எல்லாம்பாவியிருந்தவிடந்தோறும் ... ... *
உல்லாசமாகவுலாவிவந்து மல்லாடத் ... (௨௨௬)

தாண்டுபரியேறுங்கந்தவீராதிபர்போல் ... *
பூண்டுநிலைவாளெடுத்துப்போர்தாவி நீண்டு ... (௨௨௭)

வரைபெருங்குமன்னர்களித்தார்க்கதன்னீர்த் ... ...*
திரைபெருங்குமன்னைஞ்செறியப் பாவியே ... (௨௨௮)

நெய்த்தனிலம்புகுந்துநெய்தற்றடம்படிந்து ... *
மைதவழும்புன்னைவனஞ்சாய்த்துக்-கைதைதமடல் (௨௨௯)

குடிப்புளினமொன்றரதிப்பெரும்பனையைச் ... *
சாடிப்புளினந்தனையோட்டி நீடுற்ற ... (௨௩௰)

மாதிரங்கமழ்ந்திவலைவானிளம்பருவ ... ... *
மாதரங்கமழ்ந்திவலைவாய்மகந்து நாதவிழ்ந்து (௨௩௧)

பானலம்புனைந்துவரிபாய்மாறுசுடுன்றுவிழு ... *
மீனினங்கள்சிந்திவலைவீசிமொண்டு கானமெங்கும் (௨௩௨)

ஓடிக்கதிக்கரையிலொல்லைப்படைக்குருகை ... *
மூடிக்கதித்தலையின்மூழ்கப்போய் நாடிக்கன் (௨௩௩)

டந்தவருணனடிவணங்கிக்காணிக்கை ... ... *
தந்தநாளந்தனைப்புனைந்து செந்தமிழ்க்கு ... (௨௩௪)

[நகர்]

பாடலுநாடகசாலையும்பைந்தொடியார் ... ... *
ஆடலரங்குநிலையாலயமும் நீடி ... [உ௫௯]

பணிக்கோபுரநிரையும்பைம்பொன்மதிலும் ... ... *
மணிக்கோபுரமணிமேடைவைப்பும் கணைச்சாயர் ... [உ௬௰]

கூட்டமுமுத்தமிழிற்கோதாட்டிநல்லிருந்தின் ... *
தேட்டமும்பாராட்டுஞ்சீராட்டும் கோட்டி ... [உ௬௧]

வனசத்திரமுகட்பாமறையோர்க்கெல்லாம் ... *
இனசத்திரமுதவுஞ்சீரும் அனத்தில் ... ... (உ௬உ)

குலந்தாமரைமேற்குலாவுங்குளமும் ... ... *
நலந்தாங்கிருக்கநதியும் அலர்ந்த ... ... (உ௬௩)

அளகாபுரியுமமோகனூரும் ... ... ... *
பளகாகச்செல்வம்பரித்து வளமேவும் ... ... (உ௬௪)

செந்நெலும் பூகமுந்தின்கரும்புஞ்சந்தனமும் ... *
பன்னுவளநாகைப்பதியினான் ஒன்னலரச் ... (உ௬௫)

(மாலை)

சாடுகின்றவெல்வீரன்றன்மார்பனுதினமும் ... *
சூடுகின்றவாகைத்தொடையினான் கூடலரைப் (உ௬௬)

பேயுங்கழுகும்பெருவிருந்துகொண்டாடப் ... *
பாயுங்கவனப்பரியினான் ஆயும் ... ... (உ௬௭)

(யானை)

அருந்தமிழோர்சொற்படியேயாறுறுப்புமாணைப் ... *
பொருந்திமதமூன்றும்பொழிந்து-இருந்தார் ... (உ௬௮)

படைக்கடலைத்தூளாக்கிப்பாகரைக்காய்ந்தோடி ... *
நடைக்குமனவேகமெனநாடி இடிக்கும் ... (உ௬௯)

உருமேறெனமுழங்கியொன்பான்முழம்பெற் ... ... *
றருமேகநீரையருந்தி வருமேரு ... ... (உ௭௰)

என்னவரிவண்டினந்தொடரக்கோபமே ... *
மன்னுமயிராவதத்தினான் மன்னி ... ... (உ௭௧)

(கொடி)

இலகுகடற்பாரிலெதிரில்லையென்றே ... ... *
குலவுமகரக்கொடியாய் நிலைமைபெறும் ... [உசஉ]

[முரசம்]

சகலவனைவசயமென்றேகன் முன்றிலிடை ... *
போகஞ்செய்முன்னுமுரசிருள் நாகமதி ... [உசங]

[ஆணை]

கூடுகின்றசெய்யசடைச்சோதியாரம்பலத்துள் ... *
ஆடுகின்றநாதர்திருவாணையாள் நீடும் ... [உசச]

கடலுக்கரசன்கனங்குழலார்திட்டும் ... ... *
மடலுக்கியசந்தவடிவன் அடலுக்குத் ... ... [உசரு]

தோற்றியவேல்வேந்தர்தொல்லிருகெலாமிமைப்பில் ... *
மாற்றியவீரவடிவாளிருள் ஏற்றுக் ... ... [உசசு]

கொடியாஸ்தனக்குக்குலக்கொடியைநல்கி ... ... *
வடியாப்புகழ்படைத்தவள்ளல் படியாளும் ... (உசஎ)

கோமானெனவாழ்குருகுலத்தோர்கோத்திரத்தில் ... ... *
மாமாலனையமனுதுங்கன் பூமி ... ... [உசஅ]

மண்டலிகர்கொண்டாடுமானகுலசீலபரன் ... ... *
தண்டமிழ்வல்லோர்கிளையைத்தாங்குவோன் மண்டலத்தில். [ ]

நெஞ்சமெனவந்தோரைத்தப்பாமலெப்பொழுதும் ... ... *
அஞ்சலெனக்காக்குமபயத்தான்-கஞ்சத் ... [உஎய]

திருவளருமார்பன்றிருமலைராய ... ... *
வருணகுலாதித்தமகிபன்-சூரி ... ... [உஎக]

அனையதிருப்பேரனைவதியிடாத்தியாக ... ... *
கனகவனசகரத்தான் அனவரதம் ... ... [உஎஉ]

கோனேரிராசவருணகுலாதித்தன் ... ... *
தானுபரணசயதுங்கன் தேனுருப் ... ... [உஎங]

தாரால் கிளைதழைக்கத்தந்ததிருப்புதல்வன் ... ... *
வீராகரனைவெற்கரத்தால் சேரார் ... ... [உஎச]

வருணகுலாதித்தனுக்குடைமந்தனைவாழ்வு ... ... *
தருமபிராமன்சனகதாரு-திருமருவும் ... [உஎரு]

வள்ளலனையகொடைமங்காமற்றாத்தானுக் ... ... *
குள்ளதிருத்தமையனுந்துங்கம்-தெள்ளும் ... (உஎசா)

இருமரபுந்தூய்யாளியவிசைகள்வல்லான் ... ... *
ஒருமொழியேசொல்லுமுதாரன் பொருசமரில் ... (உஎஎ)

வாங்குசிலைவிசயன்மார்த்தாண்டன் வாளபிமன் ... ... *
ஓங்குமன்மாவெளிருதயன் நீங்குநெறி ... (உஎஅ)

சொல்லாராக்கிளைக்குச்சுக்கிரீவன்அறுதண்ட ... ... *
வில்லாளன்வல்லணீற்றுமேலேயான் சல்லாப ... (உஎகூ)

மாதிருகன்னருமனமுந்திறைகொள்ளும் ... ... *
பூதரவீரபுசத்திறன் ஓதும் ... ... (உஅ0)

தரணிபரிபாலன்சமரமுகவீரன் ... ... *
கருணைபரிமளிக்குங்கண்ணனுடன் பாவும் ... (உஅக)

அடுத்தவருக்காதாரனன்னசத்ரசோமன் ... ... *
கொடுத்துவழிகாட்டுங்குரிசில் தொடுத்துவிடும் ... (உஅஉ)

பூந்தாமரைமுதலைப்பூவாளியுந்திரும்பும் ... ... *
ஏந்தாதசெவ்வியெழிற்காமன் மாந்தாதா ... (உஅங)

ஆருந்தரிசித்தளவேயவரவர்தம் ... ... *
பாரம்பரையறியும்பண்பாளன் நீரன் ... ... (உஅச)

அனகனபயனமலனசலன் ... ... ... *
கனகசரணகமலன் நினைவும் ... ... ... (உஅரு)

மதுரமொழியுமரபுமினிய ... ... ... *
சதுரவிரகசரசன் அதுலன் ... ... ... (உஅசா)

இளமைவயதிலியலுமிசையும் ... ... ... *
வளமைபுனையுமகிபன் அளிகொள் ... ... (உஅஎ)

தருமபுரிமைதகுதிமிகுதி ... ... ... *
அருமைவரிசையமைவு பெருமை ... (உ௮௮)

உடையனினியவுலகிலெவரும் ... ... ... *
அடையவிழையுமழகன் மடலிதழித் ... (உ௮௯)

தாமச்சடிலனம்புசாதசரணனென்று ... ... *
காமப்பயலைவென்றகாளகண்டன் தேறுமற்று ... (உ௯௰)

மாலைக்குழவிபங்கன்மானைக்கையிலணிந்த ... .. *
கோலப்பரமனன்புகூர்துங்கன் மேவிட்ட ... (உ௯௧)

கோரக்கடினகும்பகோலத்திகடருங்க ... ... *
வீரச்சமரதந்நிமேனுதயன் நெருற்ற (உ௯௨)

சற்புருஷமேருவரசர்க்குமணவாளனிறை ... ... *
அற்புதசொரூபனகிலப்பிரியன் நற்பதுமை ... (உ௯௩)

ஒக்கவிளையாடுமவனுத்தமகிர்பாசிதன் ... ... *
மைக்கொடைகுலாவுமொருவச்ரதரன் மிக்கதொரு ... (உ௯௪)

துட்டகுலகாலனொருசொர்க்கபடிலாதிருபன் ... *
வட்டவுலகாளுமகிலப்ரபலன்-கட்டளைசேர் ... (உ௯௫)

வள்ளலிருபத்திரண்டாகமாநிலத்தோர் ... ... *
எள்ளரியசீமுதமெட்டாகத் தெள்ளுதரு ... (உ௯௬)

ஆறுகச்சங்கத்தாரைம்பதின்மராகமதி ... ... *
வீறுகவந்துதித்தவெல்வீரன் பேரும் ... (உ௯௭)

அருணனெறிசேகரத்தானச்சுதராய ... ... *
வருணகுலாதித்தமகிபன்-கிரணமிகும் ... (உ௯௮)

கார்மதித்தநற்கொடையான்காதலுடனேசக்ர ... *
பார்மதித்தநாலைப்பசுங்காவில் ஏர்மதித்த ... (உ௯௯)

(காட்சி)

பொன்போன்மரகதம்போற்பூமயில்போல்வானுலவு ... *
மின்போற்றாளவிளக்குப்போல் அன்போல்வார் ... (௩௱)

ஆருயிர்போற்றெய்வரம்பைபோல[illegible]ன்றும் ... ... *
சூரின்மகளிர்சுவடுபோல் கூரியவெள் ... ... (௩௱௧)

கண்போற்கவுஸ்துவம்போற்காகோதரநாட்டில் ... *
பெண்போலொளிரும்ப்ரவாளம்போல் நண்போதும் (௧௱௨)

சித்ரருயிர்பெற்றசெயல்போல்விசித்திரம்போல் ... *
அஸ்த்ரமதன்செங்கோலரசுபோல் முத்திறமாய்த் ... (௧௱௩)

தோய்ந்ததமிழின்சுவைபோலரன்விழியால் ... ... *
சாய்ந்தவரசுதழைக்கவே-ஆய்ந்துவரும் ... (௧௱௪)

எந்திழைபோன்முக்கனிபோல்விளைமுதுபோல்மதுரம் ... *
சாய்ந்துநறுங்குழற்கீழ்த்தள்ளாடிவந்தும் ... (௧௱௫)

இரண்டுகுடம்போலுமிருதனத்தைத்தாங்கி ... *
மருங்குதுவன்வருந்த-நெருங்கிவந்து ... (௧௱௬)

திம்பாசைக்கல்லிநெடிதுயிர்த்துத்தெய்வமே ... *
ம்பாரில்வந்தவிபராவொன்று-பொற்பாமேன் ... (௧௱௭)

பொருஞ்சங்கலங்கித்திரைவழியும்வேலையினில் ... *
கஞ்சமலரடியுங்கண்ணிணையும்-தஞ்சமெனு ... (௧௱௮)

அஞ்சல்புரியவுருதாரகமாக ... ... ... *
வஞ்சமறமகிழ்ந்துவாய்புதைத்து விஞ்சவுறும் ... (௧௱௯)

தேனேமதனதிரவியமேசெங்கமல ... ... *
மானேயனுராகவல்லியே காணேனும் ... (௧௱௰)

கொந்தளகபந்திகுலைந்தாடக்குன்றினிமிர் ... ... *
சந்தனவுபாரஸ்தனமாட உந்தியெழும் ... (௧௱௰௧)

வள்ளையிருதன்னிடின்மகரக்குழையாடப் ... ... *
புள்ளையவேற்கண்புரண்டாட மெள்ள ... (௧௱௰௨)

மருங்குலொசிந்தாடமணிவடங்களாட ... ... *
அருங்கமலமாமுகம்வேர்வாடப் பெருங்கழங்கோ ... (௧௱௰௩)

டம்மனைபந்தாடியடியேன்மருண்டாட ... ... *
இம்மனையிலாடியவிருக்கத் தொம்மென்று ... (௧௱௰௪)

வட்டத்திற்பாடிமணியூசலாடுவீர் ... ... *
இட்டத்திலேயிருக்கவெண்ணீரோ துட்டமத ... (௧௱௰௫)

அம்புருமதுவிழியம்புமிகப்பொருதால் ... ...*
நம்புமடியேற்கதுநன்றுதலே-கொம்பிற் ... (௱௰௬)

குயிலாமெனடிக்கொதிக்குமதிக்கோடை ... ... *
வெயிலால்வெதும்பிவிடவோ-புயலார் ... (௱௰௭)

உமதுகுழற்காவனைத்திறனுற்றறிமுத்தீழ் ... ... *
அமையுமிடந்தந்தருளீர் எமைமருவிக் ... (௱௰௮)

கொங்கையானைக்கோட்டாற்குத்தாமற்சித்தசனூர் ... *
வெங்கையானைக்கிடுதம்பேம்பாடோ-திங்கண்முகம் (௱௰௯)

காட்டினீர்நானுமதுகண்டேன்மயல்பூட்டி ... ...*
வாட்டினீரென்னைமறந்துசெய்தீர்-காட்டிக் ... (௱௨௰)

கெறித்துநிலவாக்கினீரென்வசனமாயன் ... ... *
குறைத்தமரமானேன்கொடியேன்-மறித்தோர் (௱௨௧)

அருள்வசனங்கூறவருமத்திறிப்பூவாமோ ... ...*
மருள்வசனம்பான்மொழிதன்மாண்போ-பொருளே (௱௨௨)

மொழியீர்மொழிந்தால்வாய்முத்துதிருமோகற் ... *
பழியீரதனாலணங்கே-செழியீர் ... ... (௱௨௩)

மதனுபதேசம்பண்ணிவாழ்விப்பீரென்றன் ... *
விதனமெலாமாறிவிடவே-முதலாப் ... (௱௨௪)

பணிவாருக்காசைநெடும்பாம்புவிஷங்கொண்டால் *
மணிவாய்மருந்துதவமாட்டீர்-தணியாத ... (௱௨௫)

வல்லிரும்புகல்லுவயிரமொவ்வொன்றுக்கிளகும் *
புல்லிருந்துவீழ்புழப்படினும்-வல்லமையால் ... (௱௨௬)

எப்படிசொன்னாலுமிளகாதுமதுமனம் ... ...*
மைப்படியுங்கூந்தன்மடந்தையே-இப்படியில் (௱௨௭)

உன்னெஞ்சமென்னெஞ்சாயுற்றுநடுநடுங்கும் ... *
என்னெஞ்சமுன்னெஞ்சாவெய்தாதோ-முன்னம் (௱௨௮)

உடுக்கையிழந்தவன்கைபோலவாங்கே ... ... *
இடுக்கண்களைவதாநட்பென்-றெடுத்துதிரு ... (௱௨௯)

வள்ளுவனூர்சொன்னகுறள்வாராதோவந்தக்கால் ... ❋
எள்ளளவுநெஞ்சமிரங்காதோ-கள்ளமதன் ... (௩௩௰)

செங்கோலுமாக்கினையுஞ்செல்லுமோநீமுனிந்தால் .. ❋
பைங்கோகனகமுறும்பாவையே-இங்கேதான் ... (௩௩௧)

நாதத்வஞ்சொன்னேனேத்தாங்கவோநீர்நினையீர் ... ❋
ஈதத்தவிர்ந்தினிவின்பமோ-சிதறித்து ... (௩௩௨)

வாசமிலாக்காரும்வனப்பிளிர்த்துத்தேய்பிறையும் ... ❋
பூசலிலேதற்குனியாப்பொற்சிலையும்-ஆசனவும் (௩௩௩)

தைத்துப்பிழைக்கறியாத்தன்னையிலாவேலும் ... ❋
வைத்தபயத்தினுறுவள்ளையும்-மொய்த்தநறை ... (௩௩௪)

கூடியமென்சிற்றிளங்கால்கொண்டபிரிலாக்குமிழும் ... ❋
ஆடையமுதுதவாவரம்பனும்-வாடிக் ... (௩௩௫)

குவிந்தலருந்தாமரையுங்கோடுமுகச்சங்கும் ... ...❋
அவிந்துவளைவெய்துமமையும்-சிவந்தகுறி ... (௩௩௬)

காட்டவறியாதகாந்தளுங்குங்குமச்சே ... ... ❋
ரூட்டப்புளகித்தறியாத-கோட்டானைக் ... (௩௩௭)

கோடுமொருவழியிற்கூடாக்கரும்பாம்பும் ... ❋
பாடுசேருதாதவடபத்திரமும்-ஆடவர்கள் ... (௩௩௮)

தர்க்கமனம்வெருவித்தாஞ்சுழலவெநிலையாய் ... ...❋
நிற்கவறியாதநீர்ச்சுழியும்-விற்கோன் ... ... (௩௩௯)

நிலைப்பாடுமேவாததேரிடையுமன்பு ... ... ❋
செலப்பாகலாயுடையதேரும்-கொலைக்குரிய ... (௩௪௰)

வாழையுங்காலூவளையில்விழுமென்றும் ... ... ❋
தாழும்வாராலுஞ்சரிகுறையில்-வீழும் ... ... (௩௪௧)

அரசுமடிபட்டுத்தளர்பத்துஞ்செம்மை ... ...❋
இராதவியற்கூர்மத்தெழிலும்-பராமரித்தே ... (௩௪௨)

பத்துமதியும்பலவடுவாய்க்காயாமல் ... ... ❋
மத்தியத்திலவந்ததுவுமாந்தளிரும் மொய்த்துமலர் .. (௩௪௩)

நீண்டகுழனெற்றிநெறிபுருவங்கண்காது ... ... *
காண்டகையநாசிவாய்கத்தரந்தோள் பூண்டகரம் ... (௫௪௪)

கொங்கையுரோமங்குளிருதரமுந்தியிடை ... ... *
தங்குநிதம்பங்கவான்றொடைமுழந்தாள்-துங்கக் ... (௫௪௫)

கணைக்கால்பரடுகுதிங்கால்புறந்தாளின்பம் ... ... *
கனைக்குமெட்டிஉள்ளங்கால்கட்கே-இணைக்கிப் ... (௫௪௬)

பெரியோர்களெல்லாரும்பேசுமருள்போல் ... ... *
சரியோதவென்றுந்தருமோ-அரிவையே ... (௫௪௭)

ஓடாதமானேயுலையாதசெம்பொன்னே ... ... *
வாடாதபூவேமரகதமே-தேடக் ... ... (௫௪௮)

கிடையாதபஞ்சவனக்கிளியேகோது ... ... *
படையாதபுல்லகண்டமாகே-நடையாடும் ... (௫௪௯)

சித்திரமேகாமன்றிரவியமேமோகநற்ச ... ... *
முத்திரமேகட்டாணிமுத்தமே-அஸ்திரமேவள் ... (௫௫௦)

ஆகமமேவாழ்வேயரசேயதிமதுர ... ... *
போகமேயான்செய்தபுண்ணியமே-மோகினியே (௫௫௧)

கண்ணேவிரகக்கருவூலமேயமுதப் ... ... *
பெண்ணேகலவிப் பிரதாபமே-ஒன்றுதலே ... (௫௫௨)

கேசயமேயென்றென்றுகிர்த்திப்பேன்வாழவுறு ... *
ராகதியாகந்தந்தாலாகாதோ-வேகமதன் ... (௫௫௩)

காவிக்கணையுங்கருப்புவில்லுநீர்தந்தால் ... .. *
சேவித்துலையன்றிச்சேரோமே-பூவுலகில் ... (௫௫௪)

சொன்மருவுநின்கொங்கைத்தூர்க்கத்திலென்னைவைத்தால் ... *
மன்மதனூர்சொல்லவசமாவேனே-பொன்மயில்போல் (௫௫௫)

நின்றயானைநீர்நிலமேனினின்றபதம் ... ... *
கன்றிலென்னுளிகன்றோதா-ஒன்றியனா ... (௫௫௬)

மாத்திரையின்பமகிழ்ந்தெனக்குப்பாலித்தென் .. *
சோத்திரமெல்லாமழுமைகொண்டகுளிர்-பூத்திகழும் (௫௫௭)

தேனேபிறக்குஞ்செனனமெலாம்யானடிமை ... ... ※
தானேயென்மேற்றிருக்கண்சாத்துவீர்-மானனையீர் (௫௫௮)

காத்தானைமார்பிற்கமலாசனத்திருவைச் ... ... ※
சேர்த்தவருணைகுலாதித்தனைச்சென்-றேத்தி ... (௫௫௯)

மகராசனென்றுனாக்கமாட்டாதார்செல்வம் ... ※
நிகராமோவாவிபத்தினோர்தாம்-இகலாதி ... ...(௫௬௰)

மோனமேபண்ணிமுனிந்திருந்தால்வினிமேலே ... ※
போனநாண்மீண்டுவரப்போகுதோ-தேனனையீர் (௫௬௧)

மாகோபமுண்டேலென்மார்மீதுந்தோண்மீதும் .. ...※
ஓகோதாள்கொண்டுதைக்கவொண்ணாதோ-கோகிலத்தில் (௫௬௨)

மன்றனைவைத்தாலும்வையுமினியுமானை ... ... ※
என்றனைக்கோபமெனக்கில்லை-மின்னனையீர் ... (௫௬௩)

நற்றிக்கண்ணேறுகொண்ட நற்கனிவாயூறலிலே ... ※
சற்றுத்தொட்டுத்தெளித்தாற்றாம்வாமோ-பொற்றொடியீர் ( )

செரீர்பவளத்திருவாய்மலர்ந்தொருசொல் ... ...※
தாரீரான்றனைத்தனிப்பாரீர் வாரீரென் ... (௫௬௫)

றுள்ளமிளகியுருகுகின்றவென்னளவில் ... ... ※
எள்ளளவுநெஞ்சமிரங்காமல்-மெள்ளவே .. (௫௬௬)

இத்தனைநேரந்தனியேயாருமொக்கும்விண்ணப்பம் ... ※
அத்தனையுங்கேட்டுங்கேளாதவர்போல்-கொத்துமலர் (௫௬௭)

பூட்டுசிலைமாரன்பொரநிற்கிறானென்று ... ... ※
காட்டுதல்போற்சற்றேகடைக்கணித்துக்-கேட்டுமிக (௫௬௮)

வின்முறுவல்செய்துவிளையாடித்தம்பியே ... ... ※
புன்முறுவல்செய்தருளிப்போயினர்-மன்மதனும் (௫௬௯)

வெங்காதல்பூணும்வெகுராசதநடையும் ... ... ※
சிங்காரப்பின்னழகுஞ்சேவித்தேன்-மங்கைநல்லார் (௫௭௰)

மண்ணிலேதோயவடிவைத்தகவடத்தனையும் - ※
கண்ணிலேயொற்றியொற்றிக்காமுற்றேன்-ஒண்ணுதலார் (௫௭௧)

நின்றநிலையுநெறித்தபுருவக்கடையும் ... ... ... *
மன்றலளகஞ்செறிந்தமாலையும்-பொன்றவெனைப் [௫௭௨]

பார்த்தபார்வைக்குட்பசப்பும்பசுந்தோளில் ... *
போர்த்தபோர்வைக்கடங்காப்பூண்முலையும்-சீர்த்தவளை [௫௭௩]

வாட்டுகின்றசெந்தாமரைமுகமுங்கஸ்தூரிக் .. ... *
கோட்டுநுதலிற்றுளவேர்வும்-தோட்டுமலர்ப் [௫௭௪]

பூங்காவில்வந்தபுதுமையுமென்கண்ணைவிட்டு ...
நீங்காமனுள்ளறிவுநீங்கினேன்-ஓங்குதுயர் ... [௫௭௫]

கொண்டேன்விலைபெண்கொடியிடமாய்வந்தபலன் *
கண்டேனிதயங்கலங்கினேன்-அண்டுபெயிர் [௫௭௬]

காணத்தவஞ்செய்தகண்போமற்றைம்பொறியும் ... *
பேணத்தவஞ்செய்யப்பெற்றிலேன் - நாணமுறு [௫௭௭]

குன்றினைநன்னடைகுலைந்தேன்றானையிழந்த ... *
அன்றிற்போல்வாடினேனவ்வளவில் - ஒன்றறியாப் [௫௭௮]

பித்தனிவனென்றெனைக்கோர்பேருண்டாயாதவிரும் . *
நித்தனிவனென்றுநினைவுற்றுச் - சித்தசன்றான் ... [௫௭௯]

தண்டாறுதல்விழியாற்றான்பட்டகண்கலக்கம் ... ... *
உண்டானவெல்லாமுளத்தெண்ணித்- [illegible] [௫௮௰]

துங்கவுலகிற்கரும்பையெல்லாநாணுச்சிச் ... . *
செங்கரும்பையெல்லாஞ்சிலையாக்கி- வெங்கலை ... [௫௮௧]

மாகவனத்தோடேவளருமசோகமெல்லாம் ... ... *
சோகவலமாகத்துணர்பறித்துச் - சேகரித்து ... (௫௮௨)

முல்லையெனும்பேரின்முழங்கிசையும்பூமியும்விட் ... *
டெல்லையிற்பூவெல்லாமெடுத்தேந்தித் - தொல்லையனுக் (௫௮௩)

குந்திக்கமலமலரொன்றளித்துச் செந்திருவை ... ...*
வந்திக்குநாகையர்கோன்மார்பிருத்திச் - சந்திக்கும் (௫௮௪)

கோகனகமுள்ளவெலாங் கொய்திரதிகண்போல்வ .. *
ஆகுமலர்மாவினலர்பறித்து - வாகையிற்போர் (௫௮௫)

ஆடிவிசயம்புனையவம்பாக்கித்தானனந்த ... ... *
கோடியுமாருபங்கொண்டெடுப்பி - நீடுலகில் ... (௩௮௬)

ஒப்புருப்பாவியுடலத்தனைத்தனைக்கோர் ... ... *
அப்புருத்தாணிதிகராக்கினேன் - மெய்ப்படவே ... (௩௮௭)

தொந்தேன்பாதவித்தேனேக்கினகாமாக்கினியால் ... *
வெந்தேனுள்ளாவிவெதுப்பினேன் - நைந்தேன் .. (௩௮௮)

விழுந்தேனயர்ந்தேன்மெலிந்தேன்றளர்ந்தேனும் ... *
அழிந்தேன்பரவசமேயானேன் - செழுங்கட ... (௩௮௯)

நெஞ்சிற்கருணையில்லாநின்பிரியார்தம்மை ... *
வஞ்சக்கனவில்வரக்கண்டேன் - செஞ்சிலம்பு ... (௩௯௰)

கொண்டவிருதாண்மலரைக்கும்பிட்டேன்வெய்யோனைக் *
கண்டகமலம்போற்களிகூர்ந்தேன் - தெண்டிரைசூழ் (௩௯௧)

நீதியுலகத்தனிலேநிசேதபங்கயன்றெடுத்த ... ... *
ஆதுலர்போற்பெருவகையாயினேன் - தீதின்றி ... (௩௯௨)

சேரும்வருணைகுலாதித்தனையேசேர்ந்துகளி ... *
கூருமவர்போற்குறைவற்றேன் - ஆரத்தின் ... (௩௯௩)

வண்டலணிகொங்கைகளைவாழ்த்தினேன்மங்கைநல்லார் *
கெண்டையிணைவிழியைக்கீர்த்தித்தேன் - அண்டையிலே (௩௯௪)

சென்றேன்பாராமுகமோதேவரீர்விண்ணப்பம் ... *
ஒன்றேயதுகேட்கவொண்ணாதோ - இன்றுமைநான் (௩௯௫)

சற்றேயொருவார்த்தைசம்பாவித்துக்கொள்ளப் ... *
பற்றேனோசொல்லாயணிமொழியீர் - பொற்றொடியீர் (௩௯௬)

எந்நேரமுமேநீரேவினதுகேட்டமது ... ... *
பின்னைதிரிந்துபிழையேதோ - என்னுடைய ... (௩௯௭)

மேதகையநெஞ்சின்விழிவேல்விளைத்துவரும் ... *
காதனிறைக்குங்களஞ்சியமே - சூதுபயில் ... (௩௯௮)

சேவலகுகண்ணீரோசெப்பீர்முக்காற்சமர்த்துக் ... *
காவெல்லிமைவேண்டாவோகாரிகையீர் - ஏலமலர் * (௩௯௯)

பாரிச்சுருளெனக்குப்பாலித்துயிர்தரிலை - *
சோறிக்கலிலைதொடங்கினர்-சீதமலர் - [௪௱௰௪]

மட்டிலேதோய்குழலார்மாமேகலைநெகிழ்த்த - - *
மட்டிலேயென்னைமறந்தேன்யான்-கட்டிமலர்க் [௪௱௰௫]

கைக்குளணைத்துக்காணக்கட்டளைவட்டத்துறையிற் - *
புக்கொருமித்தெட்டுவகைப்புட்குரலிட்-டொக்கவெடுத் [௪௱௰௬

தப்புறமுற்றிப்புறமுற்றற்புவிளைத்துப்பரிவைச் - *
செப்பிநகத்திற்குறியைச்சிக்கெனவைத் தொப்பிலெழிற் [௪௱௰௭

பற்குறியிட்டுக்கருணைப்பத்மமுகப்பொற்பொளிரப் - *
பொற்குவடொத்தப்புணரப்புத்தமிர்தத்-திற்குலவிச் [௪௱௰௮]

சற்றினிச்சற்றிறுகிச்சக்ரதலத்துக்குளிலக் - *
கற்றமர்த்தொத்தணைக்கச்சவிழப்-பொற்பு - [௪௱௰௯]

மிகுத்தமுலைக்கன்னவிரற்கொடுத்துக்கி - - *
நகத்தாலுறுத்திநகைத்து-முகத்தை - - [௪௱௨௰]

முகத்திலழுத்திமுயக்கிமயக்கி - - - - *
மிகுத்தநலத்தைவிளைத்துச்-சுகத்தில் - - [௪௱௨௰௧]

ஆரத்தநிகர்த்ததரத்தையெயிற்றில் - - - *
இருத்தியருத்தியிசைத்துக்-கருத்திலிசை - - [௪௱௨௰௨]

உற்றகரணத்திலொருவர்க்கொருவொத்துவகை - - *
பெற்றனிலடிக்கடிபிணக்குவர-நற்றுயிலில் - [௪௱௨௰௩]

மைத்திலகநெற்றிபுருவக்கடைநெறிப்புவர - *
உய்த்திடுகழுத்தொடுகையுட்புகுத-மெத்திய - [௪௱௨௰௪]

கொந்தளபந்திகுலைந்துசரிந்திட - - - - *
வந்துசுரும்பாவஞ்செய-முந்திய - - [௪௱௨௰௫]

செஞ்சரணங்கள்சிலம்புபுலம்பிட - - - *
வஞ்சிமருங்குல்வளைந்திட-அஞ்சொலுடன் - [௪௱௨௰௬]

நெஞ்சமுமொன்றிநிரம்பியசங்கிசை - - - *
கொஞ்சவிரண்டுகைக்கும்பிட-விஞ்சிய - - [௪௱௨௰௭]

ஆவியொன்றவாகமொன்றவாசையொன்றதேசமொன்ற ... *
மேவுபஞ்சபாணனுங்கள்விடாங்க-வாவுமின்ப ... (௪௨௮)

மேலணிந்தபூண்மழுங்கமேனியெங்கும்வேர்வரும்ப ... *
நீலமன்றல்வீசுமூழ்ந்தீர்ந்தரும்பக்-கோலமிகும் ... (௪௨௯)

மொய்யகலமேலிட்டமுத்துவடஞ்சிதறத் ... ... *
துய்யதிருமேனிதுவட்சிதற-மெய்யுறநான் ... (௪௩௰)

ஆரமதனாவிலறிந்தறியாச்சந்தேகம் ... ... *
சேரவடைவேதெளிவித்துக்-காரிகையார் ... (௪௩௧)

அந்தவனுராகசம்போகங்கொண்டாடி ... ... *
இந்த்ரபதம்பெற்றவர்போலின்புற்றுச்-சிந்தை ... (௪௩௨)

தனைவென்றவாட்கண்டருங்கனவைக்காம ... .. *
வினையென்றறியேன்விழித்தேன்-றனைகமழும் ... (௪௩௩)

சோலையெல்லாந்தேடினேன்சுற்றினேன்சாருமல் ... *
மாலையெல்லாங்கொண்டுவருந்தினேன்-பாலனையார் ... (௪௩௪)

அப்போதுசென்றவடியல்லாமற்பார்த்தளவில் ... *
இப்போதுசென்றவடியான்காணேன்-மெய்ப்படநான் (௪௩௫)

காணவேமுந்திக்கனவென்றறிந்தக்கால் ... .. *
வீணிலேயோடிவிழிப்பேனோ-பேணி ... (௪௩௬)

அறிவுக்கினியாரகலாமற்கையால் ... ... ...*
இறுகத்தழுவியிரேனோ-நறுநுதலார் ... ... (௪௩௭)

சீரமுதக்கொங்கையையென்செவ்வாயினூற்பற்றி ... *
ஆரமுதமுண்டுபோக்காகேனோ காரிகையார் ... (௪௩௮)

ஏயத்தனியேயெழுந்தருளவின்னமுந்த ... ... *
மாயத்துயிலெனக்குவாராதோ-நேயமுடன் ... (௪௩௯

மெத்தெனவேதீங்கிவிழித்ததுவும்பேசுவதும் ... *
இத்தனையுமோகவென்றியானறியேன்-சத்தியமே ... (௪௪௰)

என்றுவருந்தியெரியுங்கனல்வாயில் ... ... *
ஒன்றுமெழுகாயுருகினேன்-மன்றலணி ... ... (௪௪௧

பாயலிலேசற்றேபரிசித்தமாத்திரத்தில் ... ... *
ஆயிரநாள்கூடினார்போலாயினேன்-சேயிழையார் ... (௪௪௨)

அன்புபெருநலமுமந்தரங்கமும்பெருக ... *
இன்பம்பெரிதாயிருந்ததுவும்-துன்பம் ... (௪௪௩)

அனைத்துந்தவிர்ப்பவர்போலாட்கொண்டதுவும் ... *
நினைத்துநெடுமூச்செறிந்துநின்றேன்-வினைக்கலகக் ... (௪௪௪)

கோபமதனாலேகுறையுயிருங்கொள்ளைகொள்ளும் ... *
சாபமதனாலேதயங்கினேன்-சோபமனத் ... (௪௪௫)

தொந்தமதியாற்றொடர்ந்துபோதாக்குறைக்கு ... *
வந்தமதிகாயமதியழிந்தேன்-சந்தமும் ... (௪௪௬)

அண்டர்குறைத்தமரமானேனடல்வேழம் ... ... *
உண்டவிளங்கனிபோலுள்ளுடைந்தேன்-அண்டிவரும் (௪௪௭)

தீவாடையாலேதியங்கினேன்பார்மடந்தை ... ... *
மாவாடையால்மெய்மயங்கினேன்-காவில் ... (௪௪௮)

செழுந்தென்றலூடாடச்செந்தீவடவைக் ... *
கொழுந்தென்றலாலேகுறைந்தேன்-தொழுந்தகைய (௪௪௯)

காளகண்டவாள்விழியார்கட்டோளைச்செவியிற் ... *
காளகண்டவோசைபுகக்கன்றினேன்-மேளமிகும் .. (௪௫௰)

தந்திமருப்பென்னுந்தடமுலையார்காரளக ... ... *
பந்திமழைகாணாப்பயிரானேன்-முந்தியருள் ... (௪௫௧)

தாவிப்பொழிற்புமிகைச்சந்த்ரோதயங்காணு ... ... *
வாவிக்குமுதமலரானேன்-பாவியேன் ... (௪௫௨)

புண்ணானநெஞ்சுதனிற்பொங்காரம்விட்டாரக் ... *
கண்ணுழல்லாருவலாயுங்காணகிலேன்-எண்ணணில் ... (௪௫௩)

விரகாதிமோகவிளைவாங்கடலின் ... ... *
கரையேறுகின்றவழிகாணேன்-உருகிமனம் ... (௪௫௪)

பேராசைகொண்டேன்பிழைக்கும்பொருட்டாகச் ... *
சோராதொருநினைவுதோன்றிற்று-நேராகக் ... (௪௫௫)

காமமுழந்துகலங்கிவருந்தினோர்க் ... ... *
கேமமடலல்லதில்லைவலி-ஆமெனவே ... (௪௫௬)

சொன்னதிருவள்ளுவனைத்தோத்திரஞ்செய்தேன்கருத்தில் ... *
உன்னிமடலூர்தற்கொருமித்தேன்-வன்னநறுந் ... (௪௫௭)

தாதளவுஞ்செய்யவிதழ்த்தாமரைப்பூங்கண்ணனைக் ... *
காதளவுந்தாவடிபோங்கண்ணனைச்-சீதமலைச் ... (௪௫௮)

சூதானையெல்லையற்றசூதானைவள்ளையெனுங் ... *
காதானைச்சற்றுமிரங்காதானைப்-போதாகம் ... (௪௫௯)

செய்யானைமிக்கமறஞ்செய்தானைக்கார்த்தளெனுங் ... *
கையானையெவ்வளவிற்கைத்தானை-மெய்யமயல் ... (௪௬௰)

தந்தானைப்பூங்குழலின்றானைமாலளிக்க ... *
வந்தானைக்கொங்கையின்மேல்வாரானை-சிந்தைவெறுங் (௪௬௧)

கல்லானைமன்மதனூல்கற்றானைப்புருவ ... *
வில்லானையேழுலகம்விற்பானை-நல்ல[illegible] ... (௪௬௨)

தன்னிலவர்வன்னெஞ்சந்தானொழியமங்கைநல்லா ... *
ரொன்றுபடிவமெய்த்தெழுதிப்-பின்னர் ... [௪௬௩]

சடைகட்டிவெண்ணீறுசாத்திநறும்பூளைத் ... *
தொடைகட்டிவெள்ளெருக்குச்சூடி-உடல்கருக ... [௪௬௪]

நெஞ்சசரவலெறித்தநீத்தணிவனென்றுமலர்ப் ... *
பஞ்சசரம்வருப்பப்பட்டேவ-விஞ்சமுதச் ... [௪௬௫]

செம்பவளவாயார்திருவேலைக்காரனென ... .. *
அம்பொனெடுங்காகளங்களார்ப்பவே-கும்பமுனி ... [௪௬௬]

சொற்றவகைமையால்விளங்குந்தொல்காப்பியந்தெளிந்தே ... *
உற்றபெரியோர்நாற்பத்தொன்பதின்மர்-நற்றமிழ்நூல் [௪௬௭]

சேரும்வருணகுலாதித்தன்செழுங்கலைகத் ... ... *
தாருவெனுங்கோனேரிராசனருள்-பேரறஞ்சேர் ... [௪௬௮]

ஆஸ்தானபோசனனங்கவேளைத்துரந்தோன் ... *
நாத்தானிரண்டுடையாநாகரிகன்-காத்தான் ... [௪௬௯]

அருணமலர்மாதுபுணரச்சுதராய ... ... *
வருணகுலாதித்தன்மகிழத்-தருணமயல் ... [௩௭௰]
தீர்வேண்பலர்காணத்தெனருகவிதியிற்சென் ... *
றார்வேண்டணைமாவுகந்து. ... ... [௩௭௧]

ஆக கண்ணி-௩௭௰௧.



வருணகுலாதித்தன்மடல்- முற்றுப்பெற்றது.

